| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Kanukkalukku Keel Aadai Anivadin Sattam** |
| Author | : | **H. Hasan Ali Umari** |
| Language | : | Tamil |
| ©Copy Right | : | Author |
| No.of Pages | : | 48 |
| Publisher | : | **ASHAABUL HADEETH PUBLICATION** Chennai. |
| Layout Design | : | Grow Graphics, Chennai-16. |
| Sole Distributors | : | **Darussalam India**<br>324, Triplicane High Road,<br>Triplicane, Chennai - 600 005.<br>Tamil Nadu, India.<br>Ph: 044-45566249<br>email: info@darussalam.in<br>Web: www.darussalam.in |
| | | **Darul Huda**<br>211 (102), Linghi Street,<br>Mannady, Chennai - 600 001.<br>Ph: 044-2524 7866, 98401 74121<br>E-mail: muftiomar@yahoo.com<br>web: www.darulhuda.net |

**Price : ₹ 25/-**

بسم الله الرحمن الرحيم

# முன்னுரை

முஸ்லிம்கள் தங்களின் வாழ்க்கையை எவ்வாறு அமைத்துக் கொள்ள வேண்டும் என்ற வழிகாட்டுதலை இஸ்லாம் எல்லா நிலைகளிலும் அவர்களுக்கு வழங்குகிறது. அந்த அடிப் படையில் ஒரு முஸ்லிம் எந்த ஆடையை அணியலாம், எந்த ஆடையை அணியக் கூடாது. ஆண்களின் கீழாடையின் அளவு கோல் என்ன என்பது தொடர்பான சட்டங்களைத் தெளிவாகக் கூறுகிறது.

ஆடையை அணிவது தொடர்பான சட்டங்களை சிலர் பின்பற்றி னாலும் அநேகர்கள் கீழாடையின் அளவுகோல் என்ன என்பதில் அலட்சியமாகவே இருக்கின்றனர். ஆகவேதான் இன்று பரவலாக முஸ்லிம் ஆண்கள் கணுக்காலை மூடும் வகையில் கீழாடையை அணிகின்றனர். நபி ﷺ அவர்களின் சுன்னாவில் கணுக்காலுக்குக் கீழ் ஆடையை தொங்க விடுபவருக்குக் கடுமையான வேதனை அளிக்கப்படும் என்று வந்துள்ளது.

ஆகவேதான் நபி ﷺ அவர்களும் ஸஹாபாக்களும் கணுக்காலுக்குக் கீழ் ஆடை அணிந்தவர்களை கண்டித்திருக்கிறார்கள். உமர் رضي الله عنه அவர்கள் மரணத் தருவாயில் இருக்கும் நிலையில் ஒரு இளைஞர் அவர்களை சந்தித்து விட்டுத் திரும்பும்போது அவரது கீழாடை பூமியைத் தொட்டுக்கொண்டிருந்தது.

இதனைக் கண்ட உமர் رضي الله عنه அவர்கள் அந்த இளைஞரை என்னிடத் தில் கொண்டு வாருங்கள் என்றார்கள். அந்த இளைஞரிடம் என் சகோதரரின் மகனே உனது ஆடையை உயர்த்திக்கொள்! இது உனது ஆடையை நீண்ட நாள் நீடிக்கச் செய்யும். உனது இரட்சகன் மீது அச்சத்தை ஏற்படுத்தும் என்றார்கள்.

ஆக தன்னுடைய உயிர் பிரியப்போகும் நிலையில்கூட கீழாடையை கணுக்காலுக்கு மேல் உயர்த்துங்கள் என்று உமர் ﷺ அவர்கள் கூறுகிறார்கள் என்றால் இது எத்தகைய பாரதூரமான பாவமாக மார்க்கத்தில் இருக்கும். ஆனால் இன்று மற்ற பெரும் பாவங்களைப் பற்றி பேசும் மார்க்க அறிஞர்கள் கூட ஏனோ இந்த பாவத்தைப் பற்றி அதிகமாக பேசுவது கிடையாது.

ஆகவே இது தொடர்பான விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும் என்ற எண்ணத்தில் இந்த நூலை உருவாக்கியுள்ளேன். நான் அறிந்த வரை தமிழ் மொழியில் இது தொடர்பான ஒரு நூலும் இதுவரை வந்ததில்லை. அரபி மொழியில் பல நூல்கள், கட்டுரைகள் இது தொடர்பாக உள்ளன.

அத்தகைய நூல்களிலிருந்தது எடுத்த பல தகவல்களை ஒன்று திரட்டி இந்த நூலை உருவாக்கியுள்ளேன். அல்லாஹ் இந்த நூலை முஸ்லிம்களுக்கு பயனுள்ளதாக ஆக்கிட வேண்டி பிராத்திக்கின்றேன்.

இறுதியாக இந்நூலின் மொழிபெயர்ப்பினை சரிபார்த்துத் தந்த **மௌலவி தமீம் பாகவீ** (அதிரை) அவர்களுக்கும் லேஅவுட் டிசைனர் ஹைதர் அலி அவர்களுக்கும் அல்லாஹ் நற்கூலி வழங்குவானாக. மேலும் இந்த நூலை வெளியிடும் **அஸ்ஹாபுல் ஹதீஸ் பதிப்பகத்தார்**களுக்கும் அல்லாஹ் நற்கூலி வழங்குவானாக! அவர்கள் மூலம் முஸ்லிம்களின் மத்தியில் கல்வி வெளிச்சத்தை ஏற்படுத்துவானாக! ஆமீன்.

அன்புடன்

**ஹசன் அலீ உமரி**
IRGC - சென்னை
**hasanumari@gmail.com**



# கணுக்காலுக்குக் கீழ் ஆடை அணிவதின் சட்டம்

புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே, அவனையே புகழ் கிறோம், அவனிடமே உதவி தேடுகிறோம். அவனிடமே பிழை பொறுக்க வேண்டுகிறோம். நமது நஃப்ஸின் தீங்கு களை விட்டும், நமது அமல்களில் ஏற்படும் கெடுதிகளை விட்டும் அல்லாஹ்விடமே பாதுகாவல் தேடுகிறோம். எவரை அல்லாஹ் நேர்வழியில் செலுத்துகிறானோ அவரை வழிகெடுப்பவர் யாருமில்லை. மேலும் எவரை அல்லாஹ் வழிகேட்டில் விட்டுவிடுகிறானோ அவரை நேர்வழிபடுத்து பவர் யாருமில்லை.

வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரு மில்லை. அவன் தனித்தவன்; அவனுக்கு இணையில்லை, முஹம்மத் ﷺ அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும், அவனது தூதரும் ஆவார்கள் என நான் சாட்சி கூறுகிறேன்.

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اتَّقُوا اللَّهَ حَقَّ تُقَاتِهِ وَلَا تَمُوتُنَّ إِلَّا وَأَنْتُمْ مُسْلِمُونَ

நம்பிக்கை கொண்டோரே! நீங்கள் அல்லாஹ்வை அஞ்ச வேண்டிய முறையில் அஞ்சிக் கொள்ளுங்கள். நிச்சயமாக நீங்கள் முஸ்லிம்களாகவே அன்றி மரணித்துவிட வேண்டாம். (3:102)

يَا أَيُّهَا النَّاسُ اتَّقُوا رَبَّكُمُ الَّذِي خَلَقَكُمْ مِنْ نَفْسٍ وَاحِدَةٍ وَخَلَقَ مِنْهَا زَوْجَهَا وَبَثَّ مِنْهُمَا رِجَالًا كَثِيرًا وَنِسَاءً وَاتَّقُوا اللَّهَ الَّذِي تَسَاءَلُونَ بِهِ وَالْأَرْحَامَ إِنَّ اللَّهَ كَانَ عَلَيْكُمْ رَقِيبًا

மனிதர்களே! உங்களை ஒரே ஆத்மாவிலிருந்து படைத்த உங்கள் இரட்சகனை அஞ்சிக் கொள்ளுங்கள் அவன் அதிலிருந்து அதன் துணைவியைப் படைத்து, அவை இரண்டிலிருந்தும் அதிமான ஆண்களையும் பெண்களையும் பரவச்செய்தான். எவனைக் கொண்டு நீங்கள் ஒருவர் மற்றவரிடம் (உரிமைகளைக்) கேட்டுக் கொள்வீர்களோ அந்த அல்லாஹ்வையும் மேலும், இரத்த உறவுகளை(த் துண்டித்து நடப்பதை)யும் அஞ்சிக் கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் உங்களைக் கண்காணிப்பவனாக இருக்கின்றான். (4:1)

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اتَّقُوا اللَّهَ وَقُولُوا قَوْلًا سَدِيدًا يُصْلِحْ لَكُمْ أَعْمَالَكُمْ وَيَغْفِرْ لَكُمْ ذُنُوبَكُمْ وَمَنْ يُطِعِ اللَّهَ وَرَسُولَهُ فَقَدْ فَازَ فَوْزًا عَظِيمًا

நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்வை அஞ்சுங்கள்! இன்னும் நேர்மையான வார்த்தையையே கூறுங்கள். (அவ்வாறு செய்தால்) உங்கள் செயல்களை உங்களுக்கு அவன் சீராக்குவான். மேலும், உங்கள் பாவங்களை உங்களுக்கு மன்னிப்பான். யார் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும்

கட்டுப்படுகின்றாரோ நிச்சயமாக அவர் மகத்தான வெற்றியை ஈட்டிக்கொண்டார். (33:70,71)

நிச்சயமாக வார்த்தைகளில் உண்மையானது அல்லாஹ்வின் வேதமாகும். வழிமுறைகளில் சிறந்தது முஹம்மத் ﷺ அவர்களின் வழிமுறையாகும். காரியங்களில் கெட்டது புதிதாக உருவாக்கப்படுபவையே. புதியவைகள் அனைத்தும் பித்அத் ஆகும்; பித்அத்துகள் அனைத்தும் வழிகேடாகும்; வழிகேடுகள் அனைத்தும் நரகில் கொண்டுபோய் சேர்க்கும்.

إِنْ تَجْتَنِبُواْ كَبَآئِرَ مَا تُنْهَوْنَ عَنْهُ نُكَفِّرْ عَنكُمْ سَيِّئَاتِكُمْ وَنُدْخِلْكُم مُّدْخَلاً كَرِيمًا

எதை விட்டும் நீங்கள் விலக்கப்பட்டிருக்கிறீர்களோ அத்தகைய பெரும் பாவ(மான காரிய)ங்களிலிருந்து நீங்கள் விலகிக் கொண்டால், உங்களுடைய (மற்ற சிறிய) தீயவை களை உங்களை விட்டும் நாம் போக்கிவிடுவோம். இன்னும் சங்கையான நுழைவிடத்தில் உங்களை நாம் நுழைவிப்போம். (அல்குர்ஆன் 4:31)

நபி ﷺ அவர்களின் சுன்னாவில் ஆண்கள் கீழாடையை கணுக்காலுக்குக் கீழ் அணியக் கூடாது என்று தெளிவாக வந்துள்ளது. எனினும், சிலர் நபி ﷺ அவர்களின் சுன்னாவை தவறாக விளங்கியதன் காரணமாக தற்பெருமை இல்லாமல் ஆடையை கணுக்காலுக்கு கீழ் தொங்கவிடலாம் தற்பெருமையுடன் மட்டுமே தொங்கவிடக் கூடாது எனக் கூறி வருகின்றனர்.

ஆடையை கணுக்காலுக்குக் கீழ் அணியக் கூடாது என்பது ஆடை கணுக்காலில் படாமல் கணுக்காலுக்கு மேலே இருப்பது போல் அணிவதாகும்.

காலாடை கணுக்காலைத் தொடாமல் கணுக்காலுக்கு மேலே இருப்பதை அளவுகோலாகக் கொண்டே காலங் காலமாக இவ்விஷயத்தில் கருத்து வேறுபாடு நிலவி வருகிறது. ஆனால் தற்போது தமிழகத்தில் சிலர், அவர்கள் செய்த ஆய்வின் அடிப்படையில் காலாடை கணுக்காலைத் தாண்டி தரையில் படாத வரை இருக்குமாறு அணிந்தாலும் தவறேதுமில்லை என்று கூறி வருகின்றனர். அவர்களின் ஆய்வு தவறானது என்பதையும் நூலின் கடைசி பகுதியில் விளக்கியுள்ளேன்.

## கணுக்காலுக்குக் கீழ் ஆடையை தொங்கவிடுவது பெரும்பாவங்களில் ஒன்றாகும்.

எந்த ஒரு பாவமான காரியத்தை குறித்து அதனைச் செய்வதால் ஒருவருக்கு சாபம் அல்லது நரக நெருப்பு அல்லது உலகில் குற்றவியல் சட்டங்களின் அடிப்படையில் தண்டனை ஏற்படும் என அல்குர்ஆன் மற்றும் சுன்னாவில் வந்துள்ளதோ அவையனைத்தும் பெரும்பாவங்களில் அடங் கும் என மார்க்க அறிஞர்கள் வரையறுத்துக் கூறுகின்றனர். அந்த அடிப்படையில் கணுக்காலுக்கு கீழ் ஆடையை தொங்க விடுவதும் பெரும்பாவங்களில் ஒன்றாகும். ஏனெனில் இவ்வாறு அணிவதினால் அவருக்கு தண்டனை ஏற்படும் என ஹதீஸ்களில் வந்துள்ளது.

عَنْ أَبِى هُرَيْرَةَ عَنِ النَّبِىِّ صلى الله عليه وسلم قَالَ مَا

أَسْفَلَ مِنَ الْكَعْبَيْنِ مِنَ الإِزَارِ فَفِى النَّارِ (البخاري)

நபி ﷺ அவர்கள் கூறினார்கள், கணுக்காலில் இருந்து கீழே தொங்கும் கீழங்கி நரக நெருப்பில் இருக்கும். (அறிவிப்பாளர்: அபூஹுரைரா ؓ, நூல்: புகாரி - 5787)

عَنْ أَبِى هُرَيْرَةَ أَنَّ رَسُولَ اللَّهِ صلى الله عليه وسلم قَالَ لاَ يَنْظُرُ اللَّهُ يَوْمَ الْقِيَامَةِ إِلَى مَنْ جَرَّ إِزَارَهُ بَطَرًا (البخاري)

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்: கர்வத்தோடு தனது கீழாடையை (கணுக்காலுக்குக் கீழ்) இழுத்துச் செல்பவனை அல்லாஹ் மறுமை நாளில் பார்க்க மாட்டான். (அறிவிப்பாளர்: அபூஹுரைரா ؓ, நூல்: புகாரி - 5788)

عَنْ أَبِى ذَرٍّ عَنِ النَّبِىِّ صلى الله عليه وسلم قَالَ ثَلاَثَةٌ لاَ يُكَلِّمُهُمُ اللَّهُ يَوْمَ الْقِيَامَةِ وَلاَ يَنْظُرُ إِلَيْهِمْ وَلاَ يُزَكِّيهِمْ وَلَهُمْ عَذَابٌ أَلِيمٌ قَالَ فَقَرَأَهَا رَسُولُ اللَّهِ صلى الله عليه وسلم ثَلاَثَ مِرَارٍ. قَالَ أَبُو ذَرٍّ خَابُوا وَخَسِرُوا مَنْ هُمْ يَا رَسُولَ اللَّهِ قَالَ «الْمُسْبِلُ وَالْمَنَّانُ وَالْمُنَفِّقُ سِلْعَتَهُ بِالْحَلِفِ الْكَاذِبِ. مسلم –٣٠٦

அல்லாஹ் மறுமை நாளில் மூன்று பேரிடம் பேசவுமாட்டான், அவர்களை பார்க்கவுமாட்டான், அவர்களைத் தூய்மைப் படுத்தவுமாட்டான். மேலும் அவர்களுக்குத் துன்புறுத்தும்

வேதனையும் உண்டு என்று நபி அவர்கள் கூறினார்கள்.

இதனை அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் மூன்று முறை கூறினார்கள். அவர்கள் இழப்புக்குள்ளாகிவிட்டனர், நஷ்ட மடைந்து விட்டனர். அவர்கள் யார் அல்லாஹ்வின் தூதரே? என்று நான் கேட்டேன்.

அதற்குத் தமது ஆடையை (தற்பெருமையுடன் கணுக்காலுக்(கு)க் கீழே தொங்கவிட்டவர், செய்த உதவியை சொல்லிக் காட்டுபவர் மற்றும் பொய்ச் சத்தியம் செய்து தமது பொருளை விற்பனை செய்பவர் என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பாளர்: அபூதர் رضي الله عنه, நூல்: முஸ்லிம் - 306)

عَنِ سَالِمٍ أَنَّ ابْنَ عُمَرَ حَدَّثَهُ أَنَّ النَّبِىَّ صلى الله عليه وسلم قَالَ بَيْنَمَا رَجُلٌ يَجُرُّ إِزَارَهُ مِنَ الْخُيَلاَءِ خُسِفَ بِهِ ، فَهْوَ يَتَجَلْجَلُ فِى الأَرْضِ إِلَى يَوْمِ الْقِيَامَةِ (البخاري – ٣٤٨٥)

நபி ﷺ அவர்கள் கூறினார்கள், (முன்னொரு காலத்தில்) ஒரு மனிதன் தன் கீழங்கியை தற்பெருமையின் காரணத்தால் (கணுக்காலின் கீழ் தொங்கவிட்டு) இழுத்துக் கொண்டே நடந்தபோது அவன் (பூமியில்) புதைந்து போகும்படி செய்யப் பட்டான் அவன் மறுமை நாள் வரை பூமிக்குள் அழிந்து சென்று கொண்டேயிருப்பான். (அறிவிப்பாளர்: இப்னு உமர் رضي الله عنه, நூல்: புகாரி - 3485)

عَنْ مُحَمَّدِ بْنُ زِيَادٍ قَالَ سَمِعْتُ أَبَا هُرَيْرَةَ وَرَأَى رَجُلاً يَجُرُّ

إِزَارَهُ فَجَعَلَ يَضْرِبُ الأَرْضَ بِرِجْلِهِ وَهُوَ أَمِيرٌ عَلَى الْبَحْرَيْنِ وَهُوَ يَقُولُ جَاءَ الأَمِيرُ جَاءَ الأَمِيرُ.قَالَ رَسُولُ اللَّهِ صلى الله عليه وسلم إِنَّ اللَّهَ لاَ يَنْظُرُ إِلَى مَنْ يَجُرُّ إِزَارَهُ بَطَرًا (مسلم )

அபூஹுரைரா ﵁ அவர்கள் பஹ்ரைன் நாட்டின் அமீராக இருந்தபோது ஒரு மனிதர் தமது கீழாடையை (கணுக்காலுக்கு கீழ்) இழுத்துச்செல்வதை கண்டார்கள். அப்போது தமது காலை பூமியில் தட்டியவாறு, தலைவர் வருகிறார் தலைவர் வருகிறார் என்று கூறிவிட்டு கர்வத்துடன் தனது கீழாடையை இழுத்துச் செல்பவனை அல்லாஹ் மறுமையில் பார்க்க மாட்டான் என்று அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள் என்றார்கள். (அறிவிப்பாளர்: முஹம்மத் பின் ஜியாத் ﵀, நூல்: முஸ்லிம் - 4239 )

عَنِ ابْنِ عُمَرَ أَنَّهُ رَأَى رَجُلاً يَجُرُّ إِزَارَهُ فَقَالَ مِمَّنْ أَنْتَ فَانْتَسَبَ لَهُ فَإِذَا رَجُلٌ مِنْ بَنِى لَيْثٍ فَعَرَفَهُ ابْنُ عُمَرَ قَالَ سَمِعْتُ رَسُولَ اللَّهِ صلى الله عليه وسلم بِأُذُنَىَّ هَاتَيْنِ يَقُولُ مَنْ جَرَّ إِزَارَهُ لاَ يُرِيدُ بِذَلِكَ إِلاَّ الْمَخِيلَةَ فَإِنَّ اللَّهَ لاَ يَنْظُرُ إِلَيْهِ يَوْمَ الْقِيَامَةِ (مسلم)

ஒரு மனிதர் தமது கீழாடையை கணுக்காலுக்கு கீழே அணிந்து செல்வதை இப்னு உமர் ﵁ அவர்கள் கண்டபோது, நீர் யார்? என்று கேட்டார்கள். அவர் தமது குடும்பத்தைப் பற்றித் தெரிவித்தார். அவர் பனு லைஸ் குலத்தைச் சேர்ந்தவராய்

இருந்தார். அவரை அறிந்துகொண்ட பின், அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், தற்பெருமையடிக்கும் நோக்கத்துடன் தனது கீழாடையை இழுத்துச் சென்றவனை அல்லாஹ் மறுமையில் பார்க்கமாட்டான் என்று கூறியதை நான் எனது இந்த இரு காதுகளால் கேட்டுள்ளேன் என்றார்கள். (அறிவிப் பாளர்: முஸ்லிம் பின் யனாக் ؓ, நூல்: முஸ்லிம் - 4236)

இந்த ஹதீஸ்களின் மூலம் கணுக்காலுக்குக் கீழே ஆடையை அணிவதால் அது நரக நெருப்பில் இருக்கும். அல்லாஹ் அவ்வாறு அணிபவர்களை பார்க்க மாட்டான்; அவர்களுடன் பேச மாட்டான்; அவர்களைத் தூய்மைப்படுத்த மாட்டான் மற்றும் அவர்களுக்கு கடுமையான வேதனையுண்டு என்பதை அறியலாம்.

மேலும் கணுக்காலுக்குக் கீழ் ஆடையை அணிவது பாவமான காரியமாக இருப்பதினாலேயே இவ்வாறு அணிபவர்களை நபி ﷺ அவர்களும் மற்றும் ஸஹாபாக்களும் வன்மையாக கண்டித்துள்ளார்கள்.

இஸ்லாமிய மார்க்கத்தில் கணுக்காலுக்குக் கீழ் ஆடையை தொங்கவிடுவது பாவமான செயல் என்பதை அறிந்திருந்தும் கூட முஸ்லிம்களில் பெரும்பாலானோர் இதில் கவனக் குறை வாகவே இருக்கின்றனர். இஸ்லாமிய மார்க்கத்தை முறையாக பின்பற்றாதவர்களை தவிர்த்துவிட்டு மார்க்கத்தைப் பின்பற்று பவர்களை மட்டுமே எடுத்துக்கொண்டாலும் இதில் அலட்சிய மாகவே இருக்கின்றனர்.

இன்னும் சிலர் தற்பெருமையுடன் மட்டுமே கணுக்காலுக்குக்

கீழ் அணியக் கூடாது. தற்பெருமையில்லாமல் அணிவது கூடும் என்ற அடிப்படையில் கணுக்காலுக்குக் கீழ் அணிகின்றனர். கணுக்காலுக்குக் கீழ் தற்பெருமையில்லாமல் ஆடையை தொங்க விடுவது கூடுமா என்பதை இனி காண்போம்.

## *தற்பெருமையில்லாமல் ஆடையை கணுக்காலுக் குக் கீழே தொங்க விடலாமா?*

நபி ﷺ அவர்களின் சுன்னாவை தவறாக விளங்கிய சிலர் கணுக்காலுக்குக் கீழ் தற்பெருமையுடன் மட்டுமே ஆடையை தொங்கவிடக் கூடாது. தற்பெருமையில்லாமல் ஆடையை தொங்க விடலாம் என்கின்றனர். இதற்கு இரண்டு ஆதாரங் களை கூறுகின்றனர்.

**முதல் ஆதாரம்:** தற்பெருமையை குறிப்பிடாமல் வந்துள்ள ஹதீஸ்கள் அனைத்தையும், தற்பெருமையை குறிப்பிட்டு வந்துள்ள ஹதீஸ்களோடு இணைத்து ஒரே சட்டமாக தற்பெருமையுடன் மட்டுமே கணுக்காலுக்கு கீழ் அணிவது கூடாது. தற்பெருமையில்லாமல் அணியலாம் என்கின்றனர்.

**இரண்டாவது ஆதாரம்:** அபூபக்கர் رضي الله عنه அவர்கள் தொடர்பான ஹதீஸை சுட்டிக்காட்டுகின்றனர்.

عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ رضى الله عنهما قَالَ قَالَ رَسُولُ اللَّهِ
صلى الله عليه وسلم مَنْ جَرَّ ثَوْبَهُ خُيَلاَءَ لَمْ يَنْظُرِ اللَّهُ إِلَيْهِ

يَوْمَ الْقِيَامَةِ فَقَالَ أَبُو بَكْرٍ إِنَّ أَحَدَ شِقَّىْ ثَوْبِى يَسْتَرْخِى إِلاَّ أَنْ أَتَعَاهَدَ ذَلِكَ مِنْهُ .فَقَالَ رَسُولُ اللَّهِ صلى الله عليه وسلم إِنَّكَ لَسْتَ تَصْنَعُ ذَلِكَ خُيَلاَءَ

எவர் தன் ஆடையை தற்பெருமையின் காரணத்தால் (கணுக்காலில் படும்படி) இழுத்துச் செல்கிறாரோ அவரை அல்லாஹ் மறுமையில் பார்க்க மாட்டான் என்று அல்லாஹ் வின் தூதர் ﷺ கூறினார்கள். அப்போது அபூபக்கர் رضي الله عنه அவர்கள் நான் கவனமாக இல்லாவிட்டால் எனது ஆடை யின் ஒரு பகுதி கீழே தொங்கி விடுகின்றது என்றார்கள். அதைக் கேட்ட அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் நீங்கள் அதனை தற்பெருமைக்காக செய்பவரல்ல என்று கூறினார்கள். (அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் பின் உமர் رضي الله عنه, நூல்: புகாரி - 3665)

இந்த ஹதீஸில் அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் அபூபக்கர் رضي الله عنه அவர்களை நீங்கள் அதனை தற்பெருமைக் காக செய்பவரல்ல என்கிறார்கள். எனவே கணுக்காலுக்குக் கீழ் ஆடையை தற்பெருமையுடன் மட்டுமே அணியக் கூடாது, தற்பெருமையில்லாமல் அணியலாம் என்கின்றனர்.

***தற்பெருமையில்லாமல் அணிவது கூடும் என்று கூறுபவர்களின் ஆதாரங்களுக்கான பதிலை இனி காண்போம்.***

**முதல் ஆதாரத்திற்கான பதில்:** மேலோட்டமாக பார்க்கும்

போது தற்பெருமையை குறிப்பிடாமல் வந்துள்ள ஹதீஸ்கள் அனைத்தையும், தற்பெருமையை குறிப்பிட்டு வந்துள்ள ஹதீஸ்களோடு இணைத்து ஒரே சட்டமாக தற்பெருமையுடன் மட்டுமே கணுக்காலுக்குக் கீழ் அணிய கூடாது. தற்பெருமையில்லாமல் அணியலாம் என்கின்ற கருத்து ஏற்புடையதாக இருந்தாலும், அது இஸ்லாமிய விதிமுறை(உஸூலு)க்கு முரணானதாகும்.

அவ்விதிமுறையின் அடிப்படையில் இதனை ஒரே சட்டமாக்க முடியாது. ஏனெனில் இருவேறு காரணங்களுக்கு **(ஆடையை தற்பெருமையுடன் தொங்க விடுவது - தற்பெருமையில்லாமல் தொங்க விடுவது)** வந்துள்ள வெவ்வேறு சட்டங்களை **(நரக நெருப்பில் இருக்கும் - அல்லாஹ் அவர்களை பார்க்க மாட்டான்)** ஒன்றாக இணைத்து ஒரே சட்டமாக ஆக்குவது உஸூலின் அடிப்படையில் தவறாகும்.

குர்ஆன் மற்றும் ஹதீஸிலிருந்து சட்டங்களை பெறுவதற்கு விதிமுறைகள் உண்டு. அந்த விதிகளைப் பற்றி மார்க்க அறிஞர்கள் கூறும்போது சட்டங்கள் மற்றும் காரணங்கள் வெவ்வேறாக இருக்கும்போது எதைப்பற்றியும் குறிப்பிடப் படாதவற்றை குறிப்பிட்டு கூறப்பட்டதுடன் இணைத்து பொருள் கொள்ள கூடாது.

உதாரணத்திற்கு:

فَاغْسِلُوا وُجُوهَكُمْ وَأَيْدِيَكُمْ إِلَى الْمَرَافِق

உங்கள் முகங்களையும், முழங்கைகள் வரையில் உங்கள் இரு கைகளையும் கழுவிக் கொள்ளுங்கள். (அல்குர்ஆன் 5:6)

وَالسَّارِقُ وَالسَّارِقَةُ فَاقْطَعُوا أَيْدِيَهُمَا

திருடனும் திருடியும் அவ்விருவரும் சம்பாதித்தற்குக் கூலி யாக அல்லாஹ்விடமிருந்துள்ள தண்டனையாக அவ்விரு வரின் கைகளைத் துண்டித்து விடுங்கள். (5:38)

கரங்கள் என்ற வார்த்தை (5:38) வசனத்தில் அளவு எதனையும் குறிப்பிடமால் வந்துள்ளது. இதனையே அரபியில் ‘முத்லக்’ என்பர். (5:6) வசனத்தில் கரங்கள் என்ற வார்த்தை முழங்கை வரை என்ற அளவுடன் குறிப்பிட்டு வந்துள்ளது. இதனை அரபியில் ‘முக்கய்யித்’ என்பர்.

(5:38) வசனத்தில் கரங்கள் என்ற வார்த்தை எந்த அளவையும் குறிப்பிடாமலும், (5:6) வசனத்தில் கரங்கள் என்ற வார்த்தை முழங்கை வரை என்று குறிப்பிட்டும் வந்துள்ளது, எனவே எந்த அளவையும் குறிப்பிடாமல் கரங்கள் என்று வந்துள்ளதை முழங்கை வரையுள்ள அளவு என்று குறிப்பிட்டு இவ்விரண்டையும் இணைத்து ஒரே சட்டமாக முழங்கை வரை யாரும் வெட்டுவது கிடையாது. ஏனெனில் இவ்விரு வசனங்களிலும் கரங்கள் என்ற வார்த்தை இருந்தாலும் சட்டங்கள் மற்றும் காரணங்கள் வெவ்வேறாக இருக்கின்றன.

(5:38) வசனத்தில் திருடிய காரணத்தினால் கை வெட்டுதல் என்பது சட்டமாகும். (5:6) வசனத்தில் தூய்மை இல்லாமல் இருப்பதின் காரணத்தினால் தூய்மைப்படுத்திக் கொள்ளுதல் என்பது சட்டமாகும்.

இவை இரண்டையும் ஒன்றாக இணைத்து எவ்வாறு ஒரே சட்டமாக்க முடியாதோ அவ்வாறே, ஆடையை கணுக்காலுக் குக் கீழ் தற்பெருமையுடன் மற்றும் தற்பெருமையில்லாமல் அணிவதையும் இணைத்து ஒரே சட்டமாக்க முடியாது. ஏனெனில், இங்கும் காரணங்கள் மற்றும் சட்டங்கள் வேறுபடுகின்றன. எனவே இவை இரண்டும் தனித்தனியான காரணங்கள் மற்றும் சட்டங்களைக் கொண்டதாகும். நமது இந்த கருத்தை வலுப்படுத்தும் விதமாக வந்துள்ள ஹதீஸ்

عن أبي سعيد الخدري قال قال رسول الله صلى الله عليه وسلم إزرة المسلم إلى نصف الساق ولا حرج أو لا جناح فيما بينه وبين الكعبين ما كان أسفل من الكعبين فهو في النار من جر إزاره بطرا لم ينظر الله إليه .

ஒரு முஸ்லிமின் கீழாடை கெண்டைக்காலின் பாதி வரை இருக்க வேண்டும். அல்லது கெண்டைக்காலுக்கும் கணுக் காலுக்கும் இடையே இருந்தால் அதில் குற்றம் இல்லை. கணுக்காலில் இருந்து கீழ் இருப்பவையே நரக நெருப்பில் இருக்கும். யார் தனது கீழாடையை தற்பெருமையுடன் (கணுக்காலுக்குக் கீழ்) அணிந்துச் செல்கிறாரோ அவரை அல்லாஹ் பார்க்க மாட்டான். (அறிவிப்பாளர்: அபூசயீத் அல் குத்ரி ﵁, நூல்: அபூதாவூத் - 4095)

கணுக்காலில் இருந்து கீழ் இருப்பவையே நரக நெருப்பில் இருக்கும் என்பது தற்பெருமையை குறிப்பிடாமலும். யார்

தனது கீழாடையை தற்பெருமையுடன் (கணுக்காலுக்குக் கீழ்) அணிந்து செல்கிறாரோ அவரை அல்லாஹ் பார்க்க மாட்டான். என்பது தற்பெருமையை குறிப்பிட்டும் வந்துள் ளது. எனவே ஆடையை தற்பெருமையுடன் மற்றும் தற்பெருமையில்லாமல் அணிவது ஆகிய இரண்டும் வெவ் வேறான காரணங்கள் மற்றும் சட்டங்கள் ஆகும் என்பதை இந்த ஹதீஸின் மூலம் உறுதியாக அறியலாம்.

இவை இரண்டும் வெவ்வேறான செயல்களாக இருப்ப தனாலேயே, நபி ﷺ அவர்கள் இவை இரண்டையும் ஒரே இடத்தில் தனித்தனியாக பிரித்துக் கூறுகிறார்கள்.

ஆடையை தற்பெருமையுடன் தொங்கவிடுவதற்கும், தற் பெருமையில்லாமல் தொங்கவிடுவதற்கும் வெவ்வேறான சட்டங்கள் (தண்டனைகள்) உண்டு.

ஆடையை (தற்பெருமையென்று குறிப்பிடாமல்) கணுக் காலுக்குக் கீழ் தொங்க விடுவது தொடர்பாக வந்துள்ள ஹதீஸ் களில் சட்டமாக (தண்டனையாக) அவை நரகில் இருக்கும் என்று மட்டுமே வந்துள்ளது.

ஆடையை கணுக்காலுக்குக் கீழ் தற்பெருமையுடன் தொங்க விடுவது தொடர்பாக ஹதீஸ்களில் சட்டமாக (தண்டனையாக)

- அல்லாஹ் அவர்களை பார்க்க மாட்டான்
- அல்லாஹ் அவர்களோடு பேச மாட்டான்
- அல்லாஹ் அவர்களை தூய்மைப்படுத்தமாட்டான்

➢ அவர்களுக்கு கடுமையான வேதனை உண்டு என்று வந்துள்ளது.

எனவே ஆடையை கணுக்காலுக்குக் கீழ் தற்பெருமையுடன் மற்றும் தற்பெருமை இல்லாமல் அணிவதை (சட்டங்கள் மற்றும் காரணங்கள் வேறுபடுவதினால்) ஒன்றாக இணைத்து ஒரே சட்டமாக்க முடியாது.

## மார்க்க அறிஞர்களின் கூற்றுகள்

இமாம் புகாரி ﵀ அவர்களும் ஆடையை தற்பெருமை யுடன் மற்றும் தற்பெருமையில்லாமல் தொங்கவிடுவது வெவ்வேறான காரணங்கள் மற்றும் சட்டங்கள் ஆகும் என்பதை தெளிவுப்படுத்திடவே இவை இரண்டையும்; தனித்தனிப் பாடமாக பிரித்து, கரண்டைக்கு கீழே செல்லும் ஆடை நரகம் செல்லும் என்பதை தனிப் பாடமாகவும் - தற்பெருமையுடன் தனது ஆடையை இழுத்துச் செல்பவரை அல்லாஹ் பார்க்க மாட்டான் என்பதை தனிப் பாடமாகவும் தனது ஸஹீஹுல் புகாரியில் பதிவு செய்துள்ளார்கள்.

ஹாபிழ் இப்னு ஹஜர் அல்அஸ்கலானி ﵀ அவர்கள் ஸஹீஹுல் புகாரியின் விளக்கவுரையான தனது ஃபத்ஹுல் பாரியில் இப்னுல் அரபி ﵀ அவர்களின் கூற்றான ஆடையை கணுக்காலுக்குக் கீழே தற்பெருமை இல்லாமல் தொங்கவிட்டாலும் அது தற்பெருமையாகவே கருதப்படும் என்பதை குறிப்பிட்டுவிட்டு, அதனையே தனது கருத்தாக ஆடையை இஸ்பால் செய்தால் அதனை இழுக்க நேரிடும். ஆடையை இழுப்பதினால் அது தற்பெருமையை ஏற்படுத்தி

விடும். ஆடையை அணிபவர் அதனை தற்பெருமையுடன் அணியவில்லை என்றிருந்தாலும் சரியே. (10-264) என்று பதிவு செய்துள்ளார்கள்.

அமீர் அஸ்ஸன்ஆனி ﷺ அவர்கள் கணுக்காலுக்குக் கீழ் ஆடையை தொங்க விடுவது ஆண்கள் மீது ஹராமாகும். என்ற தலைப்பில் ஒரு சிறிய புத்தகத்தை எழுதியுள்ளார்கள். அதில் ஆடையை கணுக்காலுக்குக் கீழ் தொங்கவிட்டால் அது நரகில் இருக்கும் என்று சுன்னாவில் வந்துள்ளது. எனவே இவ்வாறு அணிவது ஹராமாகும். மேலும் தற்பெருமையுடன் தொங்கவிட்டால் அதற்கு பிரத்யேகமான தண்டனையாக அல்லாஹ் அவர்களை மறுமை நாளில் பார்க்க மாட்டான் என்ற இரு நிலையையும் பதிவு செய்துள்ளார்கள்.

ஷைக் இப்னு உஸைமீன் ﷺ அவர்கள் ரியாலுஸ் ஸாலிஹீன் விளக்கவுரையில் ஆடையை இஸ்பால் செய்வது இரண்டு வகையில் அமையும் என்கிறார்கள்.

**முதல் வகை:** தற்பெருமையுடன் இஸ்பால் செய்வது

**இரண்டாம் வகை:** தற்பெருமையில்லாமல் இஸ்பால் செய்வது.

தற்பெருமையுடன் ஆடையை தொங்கவிட்டால் அதற்கு நான்கு தண்டனைகளும், தற்பெருமையில்லாமல் தொங்க விட்டால் அதற்கு ஒரு தண்டனையும் வழங்கப்படும் என்று கூறியுள்ளார்கள். (2-475)

ஷைக் பின் பாஸ் ﷺ அவர்கள், ஆடையை கணுக்காலுக்குக்

கீழ் தற்பெருமையுடன் மற்றும் தற்பெருமையில்லாமல் தொங்கவிடுவது இரண்டுமே ஹராமாகும் என்கிறார்கள். ஆடையை தற்பெருமையில்லாமல் அணிந்தால் அது நரகில் இருக்கும். தற்பெருமையுடன் அணிந்தால் அவரை அல்லாஹ் பார்க்க மாட்டான் அவருடன் பேசமாட்டான் அவரை பரிசுத்தப்படுத்தமாட்டான். மேலும் அவருக்கு கடுமையான வேதனை உண்டு என்று ஹதீஸ்களில் வந்துள்ளதை குறிப்பிட்டுள்ளார்கள். மேலும் கணுக்காலுக்குக் கீழ் ஆடையை அணிந்து கொண்டு துஆ கேட்பதினால் அவருடைய துஆவை அல்லாஹ் அங்கீகரிக்கமாட்டான் என்றும் அதற்கு ஆதாரமாக ஸஹீஹ் முஸ்லிமின் பிரபலமான ஹதீஸான, ஒரு மனிதன் அல்லாஹ்விடம் கையேந்தி பிராத்திக்கின்றான். அவனுடைய உணவு ஹராமான வழியில் வந்ததாகும்; அவனுடைய பானம் ஹராமாகும்; அவனுடைய ஆடை ஹராமாகும். என்ற ஹதீஸை ஆதாரமாகக் குறிப்பிடுகிறார்கள்.

## இரண்டாவது ஆதாரமான அபூபக்கர் ﵁ அவர்களின் ஹதீஸ் தொடர்பான நமது பதில்

- ஹதீஸில் அபூபக்கர் ﵁ அவர்கள் நான் கவனமாக இல்லாவிட்டால் எனது ஆடையின் ஒரு பகுதி கீழே தொங்கி விடுகின்றது என்றார்கள். இந்த வாசகம் இரண்டு விஷயங்களை தெளிவுப்படுத்துகிறது.

1) அபூபக்கர் ﵁ அவர்கள் கீழாடையை அணியும்போது கரண்டைக்கு மேலுள்ளவாறு தான் அணிவார்கள். எனவே ஆடையை அணியும்போதே கணுக்காலுக்குக்

கீழ் அணிந்துகொண்டு அபூபக்கர் ؓ அவர்களின் ஹதீஸிலிருந்து ஆதாரம் எடுப்பது தவறாகும்.

2) அபூபக்கர் ؓ அவர்கள் கவனக்குறைவாக இருக்கும் நிலையில் மட்டுமே அவர்களின் ஒரு பக்க ஆடை கீழே இறங்கிவிடும். அதனையும்கூட அவர்கள் உயர்த்திக் கொண்டே இருப்பார்கள். எனவே அவர்களின் ஹதீஸில் இருந்து ஆதாரம் எடுப்பவர்கள் கவனமற்ற நிலையில் மட்டுமே கணுக்காலுக்குக் கீழ் ஆடை இருக்கலாம் என்று கூற வேண்டும்.

➢ நபி ﷺ அவர்களே அபூபக்கர் ؓ அவர்களை குறிப்பிட்டு தற்பெருமையுடன் அணியவில்லை என்று தூய்மைப்படுத்திக் கூறினார்கள். ஆடையை அணியும் போதே கணுக்காலுக்குக் கீழ் அணிந்துகொண்டு தற் பெருமையுடன் அணியவில்லை என்று ஒருவர் தம்மைத் தாமே எவ்வாறு தூய்மைப்படுத்திக் கொள்ள முடியும்.

فَلَا تُزَكُّوا أَنْفُسَكُمْ هُوَ أَعْلَمُ بِمَنِ اتَّقَى

நீங்களே உங்களை பரிசுத்தப்படுத்திக்கொள்ள வேண்டாம், (உங்களில்) பயபக்தியுடையவர் யார் என்பதை அவனே நன்கறிவான். (அல்குர்ஆன் 53:32)

➢ ஆடையை கணுக்காலுக்குக் கீழ் தொங்க விடுவதே தற் பெருமையாகும் என்று நபி ﷺ அவர்களின் சுன்னா கூறுகிறது.

عن جابر بن سليم عن النبي صلى الله عليه وسلم قال ارفع إزارك إلى نصف الساق فإن أبيت فإلى الكعبين وإياك وإسبال الإزار فإنها من المخيلة وإن الله لا يحب المخيلة

நபி ﷺ அவர்கள், நீங்கள் கெண்டைக்காலின் பாதி வரை கீழாடையை உயர்த்திக் கொள்ளுங்கள் இதனை நீங்கள் செயல்படுத்தாவிட்டால் கணுக்கால் வரை உயர்த்திக் கொள் ளுங்கள். கீழாடையை இஸ்பால் செய்வதைவிட்டு உம்மை எச்சரிக்கிறேன். ஏனெனில் அவ்வாறு அணிவதே தற்பெருமை யாகும். நிச்சயமாக அல்லாஹ் பெருமை கொள்வோரை விரும்பமாட்டான் என்று கூறினார்கள். (அபூதாவூத்)

நபி ﷺ அவர்கள், ஆடையை கணுக்காலுக்குக் கீழ் தொங்க விடுவதே தற்பெருமையாகும் என்று தெரிவித்த பிறகும், ஒரு மனிதர் கணுக்காலுக்குக் கீழ் அணிந்துகொண்டு தான் தற்பெருமையுடன் அணியவில்லை என்றாலும் அது தற் பெருமையாகவே கருதப்படும். எனவே ஆடையைக் கணுக் காலுக்குக் கீழ் அணிவதற்கு அனுமதியளித்தது அபூபக்கர் رضي الله عنه அவர்களுக்கான பிரத்யேகமான சட்டமாகும். அதனை பொதுவான சட்டமாக ஆக்க முடியாது.

## அபூபக்கர் رضي الله عنه அவர்களுக்குரிய பிரத்யேகமான சட்டம்

- நபி ﷺ அவர்கள் அபூபக்கர் رضي الله عنه அவர்களுக்கு கணுக் காலுக்குக் கீழ் ஆடை அணிவதற்கு அனுமதியளித்தது,

அவர்களுக்கான பிரத்யேகமான சட்டமாகும். ஏனெனில் அபூபக்கர் ﵁ அவர்களுக்கு அனுமதியளித்த நபி ﷺ அவர்கள், இப்னு உமர் ﵁ அவர்களுக்கும் மற்ற சில ஸஹாபாக்களுக்கும் அனுமதி வழங்கவில்லை.

عَنْ عَبْدِ اللَّهِ بْنِ وَاقِدٍ عَنِ ابْنِ عُمَرَ قَالَ مَرَرْتُ عَلَى رَسُولِ اللَّهِ صلى الله عليه وسلم وَفِى إِزَارِى اسْتِرْخَاءٌ فَقَالَ يَا عَبْدَ اللَّهِ ارْفَعْ إِزَارَكَ. فَرَفَعْتُهُ ثُمَّ قَالَ زِدْ. فَزِدْتُ فَمَا زِلْتُ أَتَحَرَّاهَا بَعْدُ. فَقَالَ بَعْضُ الْقَوْمِ إِلَى أَيْنَ فَقَالَ أَنْصَافِ السَّاقَيْنِ (مسلم)

அப்துல்லாஹ் பின் உமர் ﵁ அவர்கள் கூறியதாவது: நான் அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களைக் கடந்து சென்றேன். அப்போது எனது கீழாடை (கணுக்காலுக்குக்) கீழ் இருந்தது. அப்போது நபி ﷺ அவர்கள் அப்துல்லாஹ்வே! உமது கீழாடையை உயர்த்திக்கட்டு என்றார்கள். நான் உயர்த்திக் கட்டினேன். பிறகு இன்னும் சிறிது (உயர்த்து) என்றார்கள். அவ்வாறே நான் இன்னும் சிறிது உயர்த்தினேன்.

பின்னர் இதனையே நான் வழக்கமாகக் கொண்டிருக்கிறேன். (இதனைக் கேட்ட) மக்களில் சிலர் எதுவரை உயர்த்தி அணிகிறீர்கள்? என்று கேட்டார்கள். அதற்கு அப்துல்லாஹ் பின் உமர் ﵁ அவர்கள் கெண்டைக்காலின் பாதி வரை என்று பதிலளித்தார்கள். (அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் பின் வாகித் ﵀, நூல்: முஸ்லிம் - 5583)

عن جابر بن سليم عن النبي صلى الله عليه وسلم قال ارفع إزارك إلى نصف الساق فإن أبيت فإلى الكعبين وإياك وإسبال الإزار فإنها من المخيلة وإن الله لا يحب المخيلة

நபி ﷺ அவர்கள், ஜாபிர் பின் சுலைம் رضي الله عنه அவர்களிடம், நீங்கள் கெண்டைக்காலின் பாதி வரை கீழாடையை உயர்த்திக் கொள்ளுங்கள். இதனை நீங்கள் செயல்படுத்தாவிட்டால் கணுக்கால் வரை உயர்த்திக்கொள்ளுங்கள். கீழாடையை இஸ்பால் செய்வதை விட்டும் உங்களை எச்சரிக்கிறேன். ஏனெனில், அவ்வாறு அணிவதே தற்பெருமையாகும். நிச்சயமாக அல்லாஹ் பெருமை கொள்வோரை விரும்ப மாட்டான் என்று கூறினார்கள். (அறிவிப்பாளர்: ஜாபிர் பின் சுலைம் رضي الله عنه, நூல்: அபூதாவூத்)

عَنْ يَعْقُوبَ بْنِ عَاصِمٍ أَنَّهُ سَمِعَ الشَّرِيدَ يَقُولُ أَبْصَرَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ رَجُلًا يَجُرُّ إِزَارَهُ فَأَسْرَعَ إِلَيْهِ أَوْ هَرْوَلَ فَقَالَ ارْفَعْ إِزَارَكَ وَاتَّقِ اللَّهَ قَالَ إِنِّي أَحْنَفُ تَصْطَكُّ رُكْبَتَايَ فَقَالَ ارْفَعْ إِزَارَكَ فَإِنَّ كُلَّ خَلْقِ اللَّهِ عَزَّ وَجَلَّ حَسَنٌ فَمَا رُئِيَ ذَلِكَ الرَّجُلُ بَعْدُ إِلَّا إِزَارُهُ يُصِيبُ أَنْصَافَ سَاقَيْهِ أَوْ إِلَى أَنْصَافِ سَاقَيْهِ (أحمد)

ஷரித் அவர்கள் கூறினார்கள் தனது கீழாடையை கணுக்காலுக்குக் கீழ் அணிந்து சென்ற ஒருவரை அல்லாஹ்வின் தூதர் அவர்கள் பார்த்தார்கள். உடனே அவரை நோக்கி விரைந்து அல்லது மெதுவாக ஓடிச் சென்று உங்களது கீழாடையை உயர்த்துங்கள் அல்லாஹ்விற்கு அஞ்சிக் கொள்ளுங்கள் என்று கூறினார்கள்.

அதற்கு அந்த மனிதர், என் வலது மற்றும் இடது கால்களின் கட்டை விரல்கள் ஒன்று மற்றொன்றை நோக்கியவாறு கோணலாக உள்ளன. இதனால் என்னுடைய இரு முட்டுக்களும் மோதிக்கொள்ளும். (ஆகவேதான் இவ்வாறு அணிந்துள்ளேன்) என்று கூறினார்.

அதற்கு நபி ﷺ அவர்கள் உங்களது கீழாடையை உயர்த்துங்கள் கண்ணியமிக்க அல்லாஹ்வின் படைப்புகள் அனைத்தும் அழகானதே என்று கூறினார்கள். இந்நிகழ்ச்சிக்கு பிறகு அந்த மனிதரின் கீழாடை கெண்டைக்காலின் பாதி வரை இருக்கும் நிலையிலேயே காணப்பட்டார். (அறிவிப்பாளர்: யஅகூப் பின் ஆஸிம் ﵀, நூல்: அஹ்மது 18656)

நபி ﷺ அவர்கள், அபூபக்கர் ﵁ அவர்களின் ஒரு பக்க ஆடை கணுக்காலுக்குக் கீழே இருந்தபோது நீங்கள் தற்பெருமையுடன் அணிபவரல்ல என்று கூறி அதனை அங்கீகரிக்கின்றனர். ஆனால் அப்துல்லாஹ் பின் உமர் ﵁ அவர்களின் ஆடை கணுக்காலுக்குக் கீழே இருக்கும்போது கணுக்காலுக்கு மேலே உயர்த்துமாறு கட்டளையிடுகின்றனர். தற்பெருமையில்லாமல்ஆடையைகணுக்காலுக்குக்கீழ்தொங்க விடுவது பொதுவான சட்டமாக இருந்தால் அபூபக்கர் ﵁

அவர்களுக்கு அனுமதியளித்த நபி ﷺ அவர்கள், இப்னு உமர் ؓ அவர்களுக்கும் மற்ற சில ஸஹாபாக்களுக்கும் ஏன் அனுமதி வழங்கவில்லை?

ஆடையை கணுக்காலுக்குக் கீழ் தற்பெருமையில்லாமல் அணிவது பொதுவான சட்டமாக இருந்தால், நபி ﷺ அவர்கள் கணுக்காலுக்குக் கீழ் ஆடை அணிந்த நிலையில் இருந்த ஸஹாபாக்களை ஏன் கண்டிக்க வேண்டும். கால்களில் குறை உடையவருக்குக்கூட நபி ﷺ அவர்கள் கணுக்காலுக்குக் கீழ் அணிவதற்கு அனுமதியளிக்கவில்லை என்றிருக்கும்போது தற்பெருமையில்லாமல் கணுக்காலுக்குக் கீழ் அணிவது கூடும் என்று எவ்வாறு கூற முடியும்?

நபி ﷺ அவர்கள் அபூபக்கர் ؓ அவர்களுக்குக் கணுக்காலுக் குக் கீழ் அனுமதியளித்தது அவர்களுக்குரிய பிரத்யேகமான சட்டமாகும். அதனை பொதுவான சட்டமாக ஆக்க முடியாது.

மேலும் ஆடையை தற்பெருமையில்லாமல் கணுக்காலுக்குக் கீழ் அணியலாம் என்பது தவறான கருத்தாகும் என்பதை தெளிவாக அறியலாம்.

## *கணுக்காலை மறைத்தவாறு ஆடை அணியலாமா?*

ஆடையை கணுக்காலுக்குக் கீழ் தொங்க விடக்கூடாது என்பது ஆடை கரண்டையில் படாமல் கணுக்காலுக்கு மேல் இருப்பது போல் அணிவதாகும். இந்த நிலையை தெளிவுப்படுத்தும் விதமாக வந்துள்ள ஹதீஸ்கள்,

عَنْ أَبِى هُرَيْرَةَ عَنِ النَّبِىِّ صلى الله عليه وسلم قَالَ مَا

أَسْفَلَ مِنَ الْكَعْبَيْنِ مِنَ الإِزَارِ فَفِى النَّارِ (البخاري)

1) நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: கணுக்காலில் இருந்து கீழே தொங்கும் கீழங்கி நரக நெருப்பில் இருக்கும். (அறிவிப்பாளர்: அபூஹுரைரா ؓ, நூல்: புகாரி - 5787)

عن أَبِي سَعِيدٍ الْخُدْرِىَّ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صلى الله عليه وسلم « إِزْرَةُ الْمُسْلِمِ إِلَى نِصْفِ السَّاقِ وَلاَ حَرَجَ أَوْ لاَ جُنَاحَ فِيمَا بَيْنَهُ وَبَيْنَ الْكَعْبَيْنِ مَا كَانَ أَسْفَلَ مِنَ الْكَعْبَيْنِ فَهُوَ فِى النَّارِ مَنْ جَرَّ إِزَارَهُ بَطَرًا لَمْ يَنْظُرِ اللَّهُ إِلَيْهِ ».

2) ஒரு முஸ்லிமின் கீழாடை கெண்டைக்காலின் பாதி வரை இருக்க வேண்டும். அல்லது கெண்டைக்காலுக்கும் கணுக்காலுக்கும் இடையே இருந்தால் அதில் குற்றமில்லை. கணுக்கால்களுக்கு கீழ் இருப்பவையே நரக நெருப்பில் இருக்கும். யார் தனது கீழாடையை தற்பெருமையுடன் (கணுக்காலுக்குக் கீழ்) அணிந்து செல்கிறாரோ அவரை அல்லாஹ் பார்க்க மாட்டான். (அறிவிப்பாளர்: அபூசயீத் அல்குத்ரி ؓ, நூல்: அபூதாவூத்- 4095) ஸஹீஹ்

அரபியில் ஒரு பொருளின் ஆரம்ப எல்லையை குறிப்பிட مِنْ (மின்) என்ற வார்த்தை பயன்படுத்தப்படும். அவ்வாறே இந்த ஹதீஸ்களிலும் 'மினல் கஅபைன்' (கணுக்காலின் ஆரம்பப் பகுதியிலிருந்து) என்று வந்துள்ளது. எனவே கீழாடை கணுக்காலைத் தொடாமல் இருக்குமாறு அணிவது கட்டாயமாகும்.

عَنْ أَبِي تَمِيمَةَ الْهُجَيْمِيِّ عَنْ رَجُلٍ مِنْ قَوْمِهِ قَالَ لَقِيتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فِي بَعْضِ طُرُقِ الْمَدِينَةِ سَأَلْتُ عَنْ الْإِزَارِ فَقُلْتُ أَيْنَ أَتَّزِرُ فَأَقْنَعَ ظَهْرَهُ بِعَظْمِ سَاقِهِ وَقَالَ هَاهُنَا اتَّزِرْ فَإِنْ أَبَيْتَ فَهَاهُنَا أَسْفَلَ مِنْ ذَلِكَ فَإِنْ أَبَيْتَ فَهَاهُنَا فَوْقَ الْكَعْبَيْنِ فَإِنْ أَبَيْتَ فَإِنَّ اللَّهَ عَزَّ وَجَلَّ لَا يُحِبُّ كُلَّ مُخْتَالٍ فَخُورٍ . (أحمد)

3) ஹுஜைமி கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு நபித்தோழர் கூறினார்: நான் நபி ﷺ அவர்களை சந்தித்துக் கீழாடையைப் பற்றியும், அதனை எதுவரையில் அணியலாம் என்பதையும் கேட்டேன். அதற்கு நபி ﷺ அவர்கள் தனது முதுகை வளைத்து தன் கெண்டைக்காலின் எலும்பைப் பிடித்து இதுவரை அணிந்து கொள்ளுங்கள். இதனை நீங்கள் செயல்படுத்தாவிட்டால் இதற்கு (சிறிது) கீழே இதுவரை அணிந்து கொள்ளுங்கள். இதனை நீங்கள் செயல்படுத்தாவிட்டால் கணுக்கால்களுக்கு மேல் (கீழாடை இருக்குமாறு) அணிந்து கொள்ளுங்கள். இதனை நீங்கள் மறுத்தால் நிச்சயமாக அல்லாஹ் ஆணவம் கொண்ட எந்தப் பெருமைக்காரனையும் நேசிக்க மாட்டான் என்று கூறினார்கள். (அறிவிப்பாளர்: அபூதமீமா, நூல்: அஹ்மத் - ஸஹீஹ்)

இந்த ஹதீஸில் فَوْقَ الْكَعْبَيْنِ கணுக்காலுக்கு மேல் என்ற

வார்த்தை வந்துள்ளது. எனவே கீழாடை கணுக்காலில் படாமல் கணுக்காலுக்கு மேல் இருக்கும்படி அணிவது அவசியமானதாகும்.

عن حذيفة عن النبي صلى الله عليه و سلم أنه وضع يده على عضلة ساقه فقال هذا موضع الإزار فإن أبيت فأسفل فإن أبيت فلا حق للإزار في الكعبين (صحيح إبن حبان)

4) அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், என் கெண்டைக் கால்களின் அல்லது கெண்டைக்காலின் சதைப்பகுதியை பிடித்து இதுவே கீழாடை (இருக்க வேண்டிய) இடம். இதை நீங்கள் செயல்படுத்தாவிட்டால் இதற்கு (சிறிது) கீழே அணிந்து கொள்ளலாம். இதை நீங்கள் செயல்படுத்தா விட்டால் கணுக்காலில் கீழாடை படுவதற்கு உரிமை யில்லை என்று கூறினார்கள். (அறிவிப்பாளர்: ஹுதைஃபா ؓ, நூல்: ஸஹீஹ் இப்னு ஹிப்பான் - 5448 - ஸஹீஹ்) இந்த ஹதீஸ் திர்மிதியில் (1895) வேறொரு அறிவிப்பாளர் தொடரைக் கொண்டும் வந்துள்ளது.

عَنْ أَبِي هُرَيْرَةَ قَالَ قَالَ أَبُو الْقَاسِمِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ إِزْرَةُ الْمُؤْمِنِ مِنْ أَنْصَافِ السَّاقَيْنِ فَأَسْفَلَ مِنْ ذَلِكَ إِلَى مَا فَوْقَ الْكَعْبَيْنِ فَمَا كَانَ مِنْ أَسْفَلَ مِنْ ذَلِكَ فَفِي النَّارِ (أحمد)

5) அபுல் காசிம் ﷺ அவர்கள் கூறினார்கள் இறைநம்பிக்கையாளனின் கீழாடை கெண்டைக்கால்களின் பாதி வரை இருக்க வேண்டும் (அல்லது) அதற்குக் கீழே கணுக்காலுக்கு மேல்வரை இருக்க வேண்டும். அதற்கும் கீழே செல்பவை நரக நெருப்பில் இருக்கும் (அறிவிப்பாளர்: அபூஹுரைரா رضي الله عنه, நூல்: அஹ்மத் - 10151 - ஸஹீஹ்)

عَنْ يَعْقُوبَ بْنِ عَاصِمٍ أَنَّهُ سَمِعَ الشَّرِيدَ يَقُولُ أَبْصَرَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ رَجُلًا يَجُرُّ إِزَارَهُ فَأَسْرَعَ إِلَيْهِ أَوْ هَرْوَلَ فَقَالَ ارْفَعْ إِزَارَكَ وَاتَّقِ اللَّهَ قَالَ إِنِّي أَحْنَفُ تَصْطَكُّ رُكْبَتَايَ فَقَالَ ارْفَعْ إِزَارَكَ فَإِنَّ كُلَّ خَلْقِ اللَّهِ عَزَّ وَجَلَّ حَسَنٌ فَمَا رُئِيَ ذَلِكَ الرَّجُلُ بَعْدُ إِلَّا إِزَارُهُ يُصِيبُ أَنْصَافَ سَاقَيْهِ أَوْ إِلَى أَنْصَافِ سَاقَيْهِ (أحمد)

6) ஷரித் رضي الله عنه அவர்கள் கூறினார்கள்: தனது கீழாடையை கணுக்காலுக்குக் கீழ் அணிந்து சென்ற ஒருவரை அல்லாஹ் வின் தூதர் ﷺ அவர்கள் பார்த்தார்கள். உடனே அவரை நோக்கி விரைந்து அல்லது மெதுவாக ஓடிச் சென்று உங்களது கீழாடையை உயர்த்துங்கள். அல்லாஹ்விற்கு அஞ்சிக் கொள்ளுங்கள் என்று கூறினார்கள்.

அதற்கு அந்த மனிதர், என் வலது மற்றும் இடது கால்களின் கட்டை விரல்கள், ஒன்று மற்றொன்றை நோக்கியவாறு கோணலாக உள்ளன. இதனால் என்னுடைய இரு முட்டுக்களும் மோதிக்கொள்ளும். (ஆகவேதான் இவ்வாறு அணிந்துள்ளேன்) என்று கூறினார்.

அதற்கு நபி ﷺ அவர்கள் உங்களது கீழாடையை உயர்த்துங்கள். கண்ணியமிக்க அல்லாஹ்வின் படைப்பு கள் அனைத்தும் அழகானதே என்று கூறினார்கள். இந்நிகழ்ச்சிக்கு பிறகு அந்த மனிதரின் கீழாடை கெண்டைக்காலின் பாதி வரை இருக்கும் நிலையிலேயே காணப்பட்டார். (அறிவிப்பாளர்: யஅகூப் பின் ஆஸிம் ؓ, நூல்: அஹமது - 18656)

கால்களில் குறையை உடைய நபித்தோழருக்கே அதனை மறைக்க நபி ﷺ அவர்கள் அனுமதி தராமல் மேலே உயர்த்தி அணியுங்கள் என்கிறார்கள். இந்த நிலையில் ஆடை கணுக்காலில் படும்படி அல்லது கரண்டையை மூடும்படி அணிவது நபி ﷺ அவர்களின் சுன்னாவை அலட்சியப்படுத்துவதை போன்றதாகும்.

ஆடையை கணுக்கால்வரை அணியலாம் என்று ஹதீஸ்களில் வந்துள்ள அளவு எதுவரையிலானது என்பதை இந்த ஹதீஸ் கள் தெளிவுப்படுத்துகின்றன. ஆகவே ஆடை கணுக்காலில் படமால் மேலே உள்ளவாறு அணிவது அவசியமாகும். கணுக்கால்வரை என்பது கணுக்காலின் இறுதிப் பகுதி வரை என்று பொருள் கொள்வதற்கு இந்த ஹதீஸ்கள் தடையாக உள்ளன.

## ஆடை கணுக்காலில் படுவதில் தவறேதுமில்லை என்று கூறுபவர்களுக்கு மறுப்பு

தமிழகத்தில் சிலர் அவர்கள் செய்த ஆய்வின் அடிப்படையில் ஆடை கணுக்காலைத் தாண்டி தரையில் படாத வரை இருக்குமாறு அணிந்தாலும் தவறேதுமில்லை என்று கூறி வருகின்றனர். இதற்கு ஆதாரமாக அரபி அகராதியை குறிப்பிட்டு அகராதியில் ஜர் என்றால் தரையை தாங்கியவாறு இழுப்பதும், இஸ்பால் தரையில் படுமாறு தொங்கவிடுவதற்கும் சொல்லப்படும். மேலும் ஹதீஸ்களில் ஆடையை கணுக்கால் வரை அணியலாம் என்று வந்துள்ளது.

எனவே ஆடை கணுக்காலைத் தொட்டு பூமியில் படாதவரை இருக்குமாறு அணிந்தாலும் தவறேதுமில்லை. ஆடை கணுக்காலில் படவே கூடாது என்று வந்துள்ள சில ஹதீஸ் களில் வரும் அறிவிப்பாளர்கள் தொடர் பலவீனமானதாகும். வேறு சில ஹதீஸ்களில் வந்துள்ள அறிவிப்பாளர் தொடர் சரியானதாக இருந்தாலும் அவை ஆடை கணுக்காலில் படலாம் என்று வந்துள்ள ஹதீஸ்களுக்கு முரணாக இருக்கின்றது. அதனால் அதனை ஆதாரமாக ஏற்கக் கூடாது என்று கூறி வருகின்றனர்.

**நமது பதில்:** மார்க்கம் தொடர்பான பிரச்சனைகளுக்கு அரபி அகராதியை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு தீர்ப்பளிப்பது ஏற்புடையதல்ல. ஏனெனில், அரபி அகராதியில் உள்ள சில வார்த்தைகளுக்கு இஸ்லாமிய வழக்கில் வேறு பொருள் கொடுக்கப்படும். உதாரணத்திற்கு 'ஸலாத்' அரபி

அகராதியில் இதற்கு 'துஆ' பிராத்தனை என்று பொருள். இஸ்லாமிய வழக்கில் தொழுகையை குறிப்பிட 'ஸலாத்' என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது.

இஸ்பால் என்ற வார்த்தைக்கு அரபி அகராதியில் ஆடையை தரையில் படும்படி தொங்க விடுதல் என்று குறிப்பிட்டு உள்ளதாக கூறுகின்றனர். இதற்கு ஆதாரமாக பிரபல அகராதி நூலான 'லிசானுல் அரப்' என்ற நூலைக் காட்டுகின்றனர்.

'லிசானுல் அரப்' என்ற நூலில் இவர்கள் கூறுவதுபோல் ஒரு பொருளில் மட்டும் இல்லை. மாறாக ஆடையை நீளமாக அணியுதல் மற்றும் அல்லது பூமியில் படுமாறு தொங்க விடுதல் என்ற இரண்டு விதமான பொருளும் கொடுக்கப்பட்டுள்ளது. (பார்க்க லிசானுல் அரப் 11/319)

இஸ்லாமிய வழக்கில் மார்க்கம் நிர்ணயித்துள்ள கணுக்கால் வரை என்ற அளவை விட்டு நீளமாக்குவது இஸ்பால் ஆகும். அது குறித்து மேலே நாம் குறிப்பிட்டுள்ளோம்.

மேலும் அகராதியில் ஒரு பெண் தனது கூந்தலை இஸ்பால் செய்தால் என்றும். குதிரை தனது வாலை இஸ்பால் செய்தது என்றும் வந்துள்ளது. அதற்கு அந்தப் பெண்ணின் கூந்தல் பூமியிலே படும், குதிரையின் வால் தரையில் தட்டிய வாறு இருக்கும் என்று பொருள் கொள்வதா? அல்லது அவளுடைய கூந்தல் நீளமானது, குதிரையின் வால்பகுதி நீளமாக இருக்கின்றது என்று பொருள் கொள்வதா? இதில் சந்தேகத்திற்கிடமின்றி இரண்டாவது பொருளைத்தான் கொள்ள முடியும்.

அரபி அகராதியை நன்றாக கற்றுத் தேர்ந்த ஹதீஸ் நூல்களின் விரிவுரையாளர்கள் இஸ்பாலுக்கு அகராதியில் என்ன பொருள் என்பதை குறிப்பிட அகராதி நூல்களில் உள்ள கூற்றுகளை பதிவு செய்துவிட்டு இறுதியில் ஆடை கணுக்காலில் படவே கூடாது என்கின்றனர். இதுவே ஒரு வார்த்தைக்கான பொருளை அரபி அகராதி மற்றும் இஸ்லாமிய வழக்கில் உள்ளவற்றை ஒப்பிட்டு கூறுவதற்கான வழிமுறை. உதாரணத்திற்கு ஷம்சுல் ஹக் அஜீமாபாதி, அப்துர் ரஹ்மான் முபாரக் பூரி போன்றோர்.

ஷம்சுல் ஹக் அஜீமாபாதி அவர்கள் அபூதாவூதின் விரிவுரையான தனது அவ்னுல் மஅபுதில் 'இஸ்பால்' என்ற வார்த்தைக்கு அரபி அகராதியில் உள்ள கூற்றுகளை பதிவு செய்துவிட்டுப் பிறகு கூறுகிறார்கள்: கீழாடையின் முஸ்தஹபான அளவென்பது கெண்டைக்காலின் பாதி வரை யாகும். கணுக்கால் வரை அணிவது எந்த வெறுப்புமில்லாமல் அனுமதிக்கப்பட்டதாகும். கணுக்காலுக்குக் கீழ் கரண்டையை மறைத்தவாறு அணிவது ஹராமாகும். (அவ்னுல் மஅபுத்)

தமிழகத்தின் இந்த ஆய்வாளர்களின் கூற்றுப்படி 'ஜர்' என்ற வார்த்தைக்கு அரபி அகராதியில் தரையில் தட்டியவாறு இழுத்துச் செல்லுதல் என்று பொருள் இருந்தால் ஹதீஸ் களில் ஆடையை தற்பெருமையுடன் மட்டுமே இழுத்துச் செல்லக்கூடாது என்று வந்துள்ளது. தற்பெருமையில்லாமல் இழுத்துச் செல்வது கூடும் என்று இவர்கள் கூறுவார்களா?

ஆகவே மார்க்கம் தொடர்பான பிரச்சனைகளுக்கு அரபி அகராதியை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு தீர்வு காண

முற்பட்டால் அது தீர்வை ஏற்படுத்தாது. இஸ்லாமிய வழக்கில் அந்த வார்த்தைக்கு என்ன பொருள் கொடுக்கப்பட்டுள்ளது என்று பார்க்க வேண்டும். மேலும் இஸ்லாமிய அறிஞர்கள் அதனை எவ்வாறு அணுகியுள்ளனர் என்பதையும் கவனிக்க வேண்டும்.

## ஹதீஸ்கள் தொடர்பான அவர்களின் வாதம்.

ஆடை கணுக்காலில் படவே கூடாது என்றுள்ள ஹதீஸ் கள் ஆடை கணுக்காலில் படலாம் என்ற ஹதீஸ்களுக்கு முரணாக உள்ளது.

**நமது பதில்:** ஒரு ஹதீஸை பலவீனமானது என்றால் அது உஸூல் அடிப்படையில் இருக்க வேண்டும். அதுவல்லாது ஒரு ஹதீஸ், தான் விளங்கி வைத்திருக்கிற கருத்துக்கு மாற்றமாக இருப்பதால் அந்த ஹதீஸையே பலவீனமாக்குவது அல்லது அதனை மற்ற ஹதீஸ்களுக்கு முரணாக இருப்பது போல் ஒரு மாயையை உருவாக்கி அந்த ஹதீஸை மறுப்பது வழிகேடாகும்.

ஆடை கணுக்காலில் படுவதில் தவறில்லை என்று எந்த ஹதீஸில் வந்துள்ளது? அப்படி ஒரு ஹதீஸே இல்லை என்றிருக்கும்போது, எப்படி அது ஆடை கணுக்காலில் படவே கூடாது என்ற ஹதீஸ்களுக்கு முரணாக இருக்க முடியும்? ஹதீஸ்களில் கணுக்கால் வரை அணியலாம் என்று வந்துள்ளதை இவர்கள் தவறாக விளங்கிக் கொண்டு அது தான் அந்த ஹதீஸின் பொருள் என்றால் அதனை எப்படி ஏற்பது?

அவர்களின் வாதம்: ஆடை கணுக்காலில் படவே கூடாது என்று வந்துள்ள ஹதீஸ்கள் பலவீனமானதாகும்.

(குறிப்பு: மேலே கணுக்காலில் ஆடை படக் கூடாது என்று நாம் சுட்டிக்காட்டிய சில ஹதீஸ்களை இவர்கள் பலவீனமானது என்கின்றனர். அவர்களின் தவறான வாதங்களையும் நமது மறுப்பையும் இனி காண்போம்.)

**ஹதீஸ் - 1**: ஹுஜைமி கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு நபித் தோழர் கூறினார். நான் நபி ﷺ அவர்களை சந்தித்துக் கீழாடையைப் பற்றியும் அதை எதுவரையில் அணியலாம் என்றும் கேட்டேன். அதற்கு நபி ﷺ அவர்கள் தனது முதுகை வளைத்து தன் கெண்டைக்காலின் எலும்பைப் பிடித்து இதுவரை அணிந்துகொள்ளுங்கள். இதை நீங்கள் செயல்படுத்தாவிட்டால் இதற்கு (சிறிது) கீழே இதுவரை அணிந்துகொள்ளுங்கள். இதை நீங்கள் செயல்படுத்தா விட்டால் கணுக்கால்களுக்கு மேல் (கீழாடை இருக்குமாறு) அணிந்துகொள்ளுங்கள். இதனை நீங்கள் மறுத்தால் நிச்சயமாக அல்லாஹ் ஆணவம் கொண்ட எந்தப் பெருமைக்காரனையும் நேசிக்க மாட்டான் என்று கூறினார்கள். (அஹ்மத்)

**அவர்களின் வாதம்**: இந்த அறிவிப்பை அபூ தமீமா என்பவரிடமிருந்து அபுஸ்ஸலீல் என்பவர் அறிவிக்கின்றார். இந்தச் செய்தியை அபூ தமீமாவிடமிருந்து அபுஸ்ஸலீல் மட்டும் அறிவிக்கவில்லை. அபூ தமீமாவிடமிருந்து அபுஸ் ஸலீல் உட்பட காலித் மற்றும் அபூ ஃகிஃபார் ஆகிய மூவர் அறிவித்துள்ளனர்.

இந்த மூவரும் நம்பகமானவர் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால் அபுஸ்ஸலீல் காலிதுக்கும் அபூ ஃகிஃபாருக்கும் மாற்றமாக இந்தச் செய்தியை அறிவித்துள்ளார்.

காலிதுடைய அறிவிப்பிலும் அபூஃகிஃபாருடைய அறிவிப்பிலும் கணுக்கால்கள் வரை அணியலாம் என்று கூறப்பட்டுள்ளது. அதாவது கணுக்கால்களின் மீது ஆடை படுவது தவறல்ல என்றே கூறப்பட்டுள்ளது. ஆனால் மேற்கண்ட அபுஸ்ஸலீலுடைய அறிவிப்பில் கணுக்கால்கள் மீது ஆடை விழவே கூடாது என்று இதற்கு மாற்றமாகக் கூறப்பட்டுள்ளது.

அபுஸ்ஸலீலைவிட காலிதே உறுதியானவர் என்பதாலும் அபூ ஃகிஃபாருடைய அறிவிப்பு காலிதுடைய அறிவிப்புக்கு மேலும் வலு சேர்ப்பதாலும் கீழாடை கணுக்கால்களைத் தொடலாம் என்று கூறும் காலிதுடைய அறிவிப்பே சரியானதாகும். கணுக்காலில் ஆடை படக்கூடாது என்று கூறும் அபுஸ்ஸலீலுடைய மேற்கண்ட அறிவிப்பு பலவீனமாகும்.

**ஹதீஸ் - 2:** அபுல் காசிம் ﷺ அவர்கள் கூறினார்கள்: இறைநம்பிக்கையாளனின் கீழாடை கெண்டைக்கால்களின் பாதி வரை இருக்க வேண்டும் (அல்லது) அதற்குக் கீழே கணுக்காலுக்கு மேல்வரை இருக்க வேண்டும். அதற்கும் கீழே செல்பவை நரக நெருப்பில் இருக்கும் (அறிவிப்பாளர்: அபூஹுரைரா ؓ, நூல்: அஹ்மத்)

**அவர்களின் வாதம்:** முஹம்மத் பின் அம்ர், இந்தச் செய்தியை அப்துர் ரஹ்மான் பின் யஅகூப் என்பாரிடமிருந்து

அறிவிக்கின்றார். அப்துர் ரஹ்மான் பின் யஅகூபிடமிருந்து முஹம்மது பின் இப்ராஹீம் என்பாரும் இந்தச் செய்தியை அறிவித்துள்ளார். கீழாடை கணுக்கால்கள் வரை இருக்க வேண்டும் என்றே இவரது அறிவிப்பில் உள்ளது. அதாவது கீழாடை கணுக்கால்களைத் தொடுவது தவறல்ல என்றே இவருடைய அறிவிப்பில் உள்ளது.

இவர் உறுதியானவர்; நம்பகமானவர். இவர் முஹம்மது பின் அம்ரை விட வலிமையானவர். எனவே இவருக்கு மாற்றமாக அறிவிக்கும் முஹம்மது பின் அம்ருடைய அறிவிப்பை ஏற்க இயலாது.

**நமது பதில்:** இந்த அறிவிப்புகள் அனைத்தும் ஒன்றொக்கு ஒன்று முரணானதா? அல்லது ஒரே பொருளில் உள்ளதா? என்பதைப் பார்ப்போம்.

இவர்கள் கூறுவதுபோல் அபூஸ்ஸலீலின் அறிவிப்பு காலித் மற்றும் அபூஃகிஃபாரின் அறிவிப்புக்கு முரணாக உள்ளது. அவ்வாறே முஹம்மத் பின் அம்ர் அறிவிப்பு முஹம்மத் பின் இப்ராஹீமின் அறிவிப்புக்கு முரணாக உள்ளது என்று காலம் சென்ற ஹதீஸ்கலையின் எந்த இமாமாவது கூறியுள்ளார்களா?

ஹதீஸ்கலையின் எந்த இமாமும் இந்த ஹதீஸ்களை பலவீனமானது என்றோ, ஒன்றுக்கொன்று முரணானது என்றோ கூறவில்லை. இவர்கள் மட்டுமே இவ்வாறு கூறுகின்றனர். இந்த ஹதீஸ்கள் பலவீனமானது என்ற இவர்களின் கூற்று ஹதீஸ்கலையின் விதிமுறைக்கு அப்பாற்பட்டதாகும்.

இந்த ஹதீஸ்களை ஸஹீஹானது என்று சொன்ன அறிஞர்கள்: இமாம் ஹாகிம், இமாம் இப்னு ஹிப்பான், இமாம் நவவீ, இமாம் தஹபீ, ஷேக் முஹம்மத் பின் நாஸிருத்தீன் அல்அல்பானி மற்றும் ஷேக் ஷுஐப் அல்அர்னாவூத் போன்றவர்கள்.

இந்த ஹதீஸ்கள் ஒன்றொக்கொன்று முரணானது அல்ல. மாறாக ஒரே கருத்தை தரக் கூடியதாகும்.

ஹதீஸ்களை ஒரு ஆசிரியரிடமிருந்து அறிவிக்கும் பல அறிவிப்பாளர்களின் அறிவிப்பை பார்த்தால் அவர்களின் அறிவிப்புகளில் வார்த்தை வித்தியாசங்களைக் காணலாம். வார்த்தை வித்தியாசங்கள் இருந்தாலும், கருத்து ஒன்றாக இருக்கும். அதைத்தான் ஹதீஸ்கலையில் 'ரிவாயத் பில்மஅனா' என்பார்கள். இத்தகைய ஹதீஸ்கள் புகாரி, முஸ்லிம் போன்ற ஹதீஸ் கிரந்தங்களில் அதிகமாகவே இடம்பெற்றிருக்கின்றன. ஹதீஸ்கலை இமாம்களும் இத்தகைய அறிவிப்புகளை ஆதாரபூர்வமானவை, ஒரே கருத்தைத் தரக்கூடியவை என ஏற்றிருக்கிறார்கள்.

இந்த நிலையில் உள்ள ஹதீஸ்களை ஒன்றுக்கொன்று முரணாக இருக்கிறது என்று ஒருவர் கூறினால், அவர் ஹதீஸ்கலைப் பற்றிய அடிப்படை ஞானம் கூட இல்லாத வராகத்தான் கருதப்படுவார். ஏனெனில், இவ்வாறு வார்த்தை வித்தியாசங்களோடு கருத்து ஒன்றாக இருக்கின்ற ஹதீஸ்களை எல்லாம் ஒன்றுக்கொன்று முரணாக இருக்கிறது என்றால் அநேக ஹதீஸ்களை மறுக்கவேண்டிய நிலை ஏற்படும்.

இன்னும் ஒரு ஆசிரியரிடமிருந்து அறிவிக்கும் ஒரு

நம்பகமான அறிவிப்பாளர் கூடுதலாக தரும் தகவல் அதே ஆசிரியரிடமிருந்து அறிவிக்கும் மற்ற அறிவிப்பாளர்களின் அறிவிப்புக்கு முரணில்லாத வகையில் இருந்தால் அதனையே ஆதாரமாக ஏற்கலாம் என்று ஹதீஸ்கலையில் விதி இருக்கும்போது ஒரே கருத்தில் அமைந்துள்ள இந்த ஹதீஸ்களை எந்த விதியின் அடிப்படையில் ஆதாரமற்றது, பலஹீனமானது என்று இவர்கள் கூறுகிறார்கள். இவர்கள் கூறும் இந்த கருத்து ஹதீஸ்கலையில் இல்லாத ஒன்றாகும். நிராகரிக்கப்பட வேண்டிய கருத்தாகும்.

**ஹதீஸ் - 3:** ஆடை கணுக்காலில் படவே கூடாது என மற்றொரு ஹதீஸ் திர்மிதி போன்ற நூல்களில் வந்துள்ளது. அதனையும் இவர்கள் 'ளயீஃஃப்' என்று கூறி மறுக்கின்றனர். அந்த ஹதீஸ்

عَنْ حُذَيْفَةَ قَالَ أَخَذَ رَسُولُ اللَّهِ صلى الله عليه وسلم بِعَضَلَةِ سَاقِي أَوْ سَاقِهِ فَقَالَ هَذَا مَوْضِعُ الْإِزَارِ فَإِنْ أَبَيْتَ فَأَسْفَلَ فَإِنْ أَبَيْتَ فَلَا حَقَّ لِلْإِزَارِ فِي الْكَعْبَيْنِ الترمذي – ١٨٩٥

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், என் கெண்டைக்காலின் அல்லது தன்னுடைய கெண்டைக்காலின் சதைப்பகுதியை பிடித்து இதுவே கீழாடை (இருக்க வேண்டிய) இடம். இதை நீங்கள் செயல்படுத்தாவிட்டால் இதற்கு (சிறிது) கீழே அணிந்துகொள்ளலாம். இதை நீங்கள் செயல்படுத்தாவிட்டால் கணுக்காலில் கீழாடை படுவதற்கு உரிமையில்லை என்று கூறினார்கள்.

## ‘ளயீ்ஃப்’ எனக் கூற காரணம்

இந்த ஹதீஸை ஹுதைஃபா ﷺ அவர்களிடமிருந்து அறிவிக்கும் முஸ்லிம் பின் நதிரை இமாம் இப்னு ஹிப்பானைத் தவிர வேறு எந்த இமாமும் நம்பகமானவர் என்று நிரூபிக்கவில்லை. இப்னு ஹிப்பான் நம்பகத்தன்மை உறுதி செய்யப்படாதவர்களை எல்லாம் நம்பகமானவர் என்று கூறும் அலட்சியப் போக்குடையவர் என்பதால் இவரது கூற்றை ஏற்க முடியாது. ஆகவே இந்த ஹதீஸ் பலவீனமானதாகும்.

**நமது பதில்:** முஸ்லிம் பின் நதிரின் நம்பகத்தன்மையை இமாம் இப்னு ஹிப்பானை தவிர்த்து வேறு ஏதேனும் இமாம் நிரூபித்திருக்கிறார்களா என்பதை ஆய்வு செய்யும்போது இமாம் அபூ ஹாதிம் அர்ராஜி அவர்கள் முஸ்லிம் பின் நதீரை பற்றி ‘லாபஹ்ச பிஹி’ என்று கூறுகிறார்கள். இமாம் அவர்கள் இந்த வார்த்தை பிரயோகத்தை இரண்டாம் தரத்திலுள்ள அறிவிப்பாளர்களுக்கு பயன்படுத்துவார்கள். அவர்களின் அறவிப்பு ‘ஹசன்’ தரத்தில் அமையும். அவையும் ஆதாரமாக ஏற்கத் தக்கவையே.

மேலும் இந்த ஹதீஸை ஹுதைஃபா அவர்களிடமிருந்து அல்அகர் அபூ முஸ்லிம் என்பவரும் அறிவித்துள்ளதாக ஒரு ஹதீஸ் ஸஹீஹ் இப்னு ஹிப்பானில் வந்துள்ளது.

عن الأغر أبي مسلم عن حذيفة : عن النبي صلى الله عليه و سلم أنه وضع يده على عضلة ساقه فقال هذا موضع

الإزار فإن أبيت فأسفل فإن أبيت فلا حق للإزار في الكعبين

قال شعيب الأرنؤوط : إسناده قوي (صحيح إبن حبان)

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், தன்னுடைய கெண்டைக் காலின் சதைப்பகுதியை பிடித்து இதுவே கீழாடை (இருக்க வேண்டிய) இடம். இதை நீங்கள் செயல்படுத்தாவிட்டால் இதற்கு (சிறிது) கீழே அணிந்து கொள்ளலாம். இதை நீங்கள் செயல்படுத்தாவிட்டால் கணுக்காலில் கீழாடை படுவதற்கு உரிமையில்லை என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸில் உள்ள அனைத்து அறிவிப்பாளர்களும் நம்பகமானவர்கள்.

அபூ ஹாதீம் அவர்கள் கூறுகிறார்கள்: அபூ இஸ்ஹாக் இந்த ஹதீஸை முஸ்லிம் பின் நதீர் மற்றும் அல்அகர் அபூ முஸ்லிம் ஆகிய இருவரிடமிருந்து அறிவிக்கிறார். இரண்டு வழியிலுள்ளவையும் சரியானதாகும். இதில் அல்அகர் என்பவரின் அறிவிப்பு பிரபலமில்லாததும் முஸ்லிம் பின் நதிரின் அறிவிப்பு பிரபலமானதாகும்.

மேலும் இந்த ஹதீஸ் முஸ்லிம் பின் நதீரின் அறிவிப்பிற்கு முதாபஅத்தாக (ஒரு அறிவிப்பாளர் அறிவிக்கும் அறிவிப் பாளார் தொடர் வேரோரு அறிவிப்பாளரை கொண்டும் வருதல்) உள்ளது. இன்னும் இதே கருத்தில் சில ஹதீஸ்கள் வந்துள்ளன அவை ஷவாயிதாக (அவர் அறிவிக்கும் ஹதீஸில் உள்ள கருத்தைப் போன்று மற்ற ஹதீஸ்களில் வருதல்) உள்ளன. எனவே முஸ்லிம் பின் நதிரின் அறிவிப்பு

‘ஹஸன்’ என்ற தரத்தை அடையும். அதுவும் ஆதாரமாக ஏற்க தக்கவையே.

இந்த ஹதீஸை இமாம் திர்மிதி, அபூதாவூத், இப்னுமாஜா கீழாடையின் அளவுகோல் எதுவரை? என்ற பாடத்தில் பதிவு செய்துள்ளனர். மேலும் இந்த ஹதீஸினை ஆதாரமாக வைத்தே ஹதீஸ் நூல்களின் விரிவுரையாளர்கள் கீழாடை கணுக்காலுக்கு மேலே இருக்க வேண்டும் என்ற சட்டத்தை கூறுகின்றனர்.

## கணுக்கால்கள் வரை என்பதைப் பற்றிய தெளிவு

கணுக்கால் வரை ஆடையை அணியலாம் என்று ஹதீஸ் களில் வந்துள்ளது. எனவே கணுக்கால் வரை என்றால் கணுக்காலின் இறுதிப் பகுதிவரை என்று பொருள் கொள்வதா? அல்லது கணுக்காலின் ஆரம்பப் பகுதிவரை என பொருள் கொள்வதா? என்பதில் இவர்கள் இரண்டாவது பொருளை கொள்கின்றனர். இது அரபி இலக்கணத்தின் அடிப்படையில் இல்லாமல் தமிழ் மொழியின் அடிப்படையில் அவர்களாக முடிவு செய்து கொண்டதாகும்.

கணுக்கால் வரை என்பதினை குறிப்பிட சில ஹதீஸ் களில் إِلَى الْكَعْبَيْنِ (இலல் கஅபைன்) என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது.

இலா ஒரு பொருளின் இறுதி வரை என்பதை குறிப்பிடுவ தற்காக அரபு மொழியில் பயன்படுத்தப்படும் ஒரு வார்த்தை யாகும். அவ்வாறு பயன்படுத்தும் போது இறுதி என்பது

அப்பொருளின் இறுதி எல்லை வரை என்பதை அளவு கோலாக எடுப்பதா? அல்லது ஆரம்ப எல்லை வரை என்பதை அளவு கோலாக எடுப்பதா?

இதில் இரண்டு வகையாக பொருள் கொள்வதற்கும் இவ்வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது. முழங்கைகள் வரை உங்கள் கரங்களை கழுவிக் கொள்ளுங்கள் (அல்குர்ஆன் 5:6) என்பது முழங்கைகளின் இறுதி பகுதி வரை என்ற பொருளில் அமைந்துள்ளது. உங்கள் நோன்பை இரவு வரை நிறைவேற்றுங்கள் (அல்குர்ஆன் 2:187) என்பது இரவிலும் நோன்பை வைக்க வேண்டும் என்ற பொருளில் இல்லாமல் இரவு வருவதற்கு முன்பே அதன் ஆரம்பத்தில் நோன்பை முடித்துக் கொள்ளுங்கள் என்ற பொருளில் அமைந்துள்ளது.

ஆகவேதான் அரபி இலக்கணத்தை அறிந்தவர்கள் இது தொடர்பாக கூறும்போது புறச் சான்றுகளை வைத்து முடிவு செய்வதே இதற்கு சரியான தீர்வாக அமையும் என்கின்றனர். அந்த அடிப்படையில் பார்த்தாலும் சில ஹதீஸ்களில் 'மினல் கஅபைன்' கணுக்காலின் ஆரம்பப் பகுதி என்று குறிப்பிட்டும் இன்னும் சில ஹதீஸ்களில் 'ஃபவ்கல் கஅபைன்' கணுக்காலுக்கு மேலே உள்ளவாறு என்றும் வந்துள்ளது.

எனவே புறச் சான்றுகள் அடிப்படையில் பார்க்கும்போது கணுக்கால் வரை என்பது கணுக்காலின் ஆரம்பப் பகுதி யையே குறிக்கும் என்பதை அறியலாம். ஆக ஆடை கணுக்காலில் படாமல் இருக்குமாறு அணிவது கட்டாயமாகும் என்பதை இந்த இலா (கணுக்கால் வரை) என்ற வார்த்தையின் மூலமாகவும் அறியலாம்.

## ஆண்களின் கீழாடை மற்றும் பெண்களின் கீழாடை பற்றி கூறும் ஹதீஸ்

عَنْ صَفِيَّةَ عَنْ أُمِّ سَلَمَةَ أَنَّ النَّبِىَّ صلى الله عليه وسلم لَمَّا ذَكَرَ فِى الإِزَارِ مَا ذَكَرَ قَالَتْ أُمُّ سَلَمَةَ فَكَيْفَ بِالنِّسَاءِ قَالَ يُرْخِينَ شِبْرًا. قَالَتْ إِذًا تَبْدُو أَقْدَامُهُنَّ. قَالَ « فَذِرَاعًا لاَ يَزِدْنَ عَلَيْهِ ». النسائى ٥٣٥٥

நபி ﷺ அவர்கள் கீழங்கியை பற்றிக் கூறியபோது , உம்மு ஸல்மா رضي الله عنها அவர்கள், பெண்கள் தங்களது கீழங்கியை எவ்வாறு அணிவது என்று கேட்டார்கள்? அதற்கு நபி ﷺ அவர்கள் கெண்டைக்காலிளிருந்து ஒரு சாண் (கீழே) தொங்கவிட்டுக்கொள்ளுங்கள் என்றார்கள். அவ்வாறு அணிந்தால் கால்கள் வெளியே தெரியுமே என்று உம்மு ஸல்மா رضي الله عنها அவர்கள் கேட்டபோது, நபி ﷺ அவர்கள் ஒரு முழமளவு (கீழே) தொங்கவிட்டுக்கொள்ளுங்கள் அந்த அளவினை அதிகமாக்காதீர்கள் என்றார்கள். (நஸாயீ - 5355, ஸஹீஹ்)

இவர்கள் கூறுவதுபோல் கணுக்கால் வரை என்பது கணுக் காலுக்குக் கீழ் இருந்து பூமியில் படாதவரை என்றால் உம்மு ஸல்மா رضي الله عنها அவர்கள் ஏன் அவ்வாறு விளங்கவில்லை? கால்கள் வெளியே தெரியுமே என்று சொல்ல வேண்டிய அவசியம் என்ன? நபி ﷺ அவர்கள் பெண்களுக்கு, கால்களை மறைக்குமாறு கூறிவிட்டு, அந்த அளவினை

அதிகமாக்காதீர்கள் என்று ஏன் சொல்ல வேண்டும்? இந்த ஹதீஸிலிருந்து கணுக்கால் வரை என்றால் கணுக்காலுக்கு மேல் உள்ளவாறு அணிவதைத்தான் ஸஹாபாக்களும் விளங்கி வைத்திருந்தனர் என்பதை அறியலாம்.

இந்த ஹதீஸின் அடிப்படையிலேயே மார்க்க அறிஞர்கள் கணுக்காலுக்குக் கீழ் ஆடை அணிவது பெண்களுக்கு அனுமதிக்கபட்டதும் ஆண்கள் மீது ஹராமாகும் என்று கூறுகின்றனர்.

## கணுக்காலுக்குக் கீழ் ஆடையை அணிபவர் பெண் களுக்கு ஒப்பாக நடக்கிறார்.

عَنْ أَبِى هُرَيْرَةَ قَالَ لَعَنَ رَسُولُ اللَّهِ صلى الله عليه وسلم الرَّجُلَ يَلْبَسُ لِبْسَةَ الْمَرْأَةِ وَالْمَرْأَةَ تَلْبَسُ لِبْسَةَ الرَّجُلِ.

ஆண்களைப் போன்று ஆடைகளை உடுத்தக் கூடிய பெண்களையும், பெண்களைப் போன்று ஆடைகளை உடுத்தக் கூடிய ஆண்களையும் நபி ﷺ அவர்கள் சபித்துள்ளார்கள். (அறிவிப்பாளர்: அபூஹுரைரா رضي الله عنه, நூல்: அபூதாவூத் - 4100)

கணுக்காலுக்குக் கீழ் ஆடையை அணிபவர் பெண்களுக்கு ஒப்பாக ஆடை அணிந்தவராவார். அவ்வாறு அணிபவர்களை நபி ﷺ அவர்கள் சபித்துள்ளார்கள்.

இதிலிருந்து தெளிவாகத் தெரிவது என்னவெனில், ஆடை கணுக்கால் வரை என்பது கணுக்காலுக்கு மேல் உள்ளவாறு அணிவதுதான். எனவே கணுக்கால் வரை

என்றால் கணுக்காலின் இறுதிப்பகுதி வரை, தரையில் படாதவரை என்றெல்லாம் கூறுவது தவறான கருத்துகளாகும். கணுக்காலுக்கு மேல் உள்ளவாறு அணிவதே சுன்னா ஆகும்.

நபி ﷺ அவர்களின் சுன்னாவின் அடிப்படையில் முஸ்லிம் ஆண்கள் கீழாடையை கெண்டைக்காலின் பாதி வரை அணிவது முஸ்தஹபாகும். கணுக்காலுக்கு மேலுள்ளவாறு அணிவது அனுமதிக்கப்பட்டதாகும். கணுக்காலை மூடும் வகையில் அல்லது தரையில் படும் வகையில் அணிவது ஹராமாகும். அது நரக நெருப்பில் இருக்கும். தற்பெருமை யுடன் அணிந்தால் அல்லாஹ் அவரைப் பார்க்க மாட்டான் அவருக்கு துன்புறுத்தும் வேதனையும் உண்டு. நபி ﷺ அவர்களின் சுன்னாவின் அடிப்படையில் நமது கீழாடையை அணிய அல்லாஹ் நம் அனைவருக்கும் அருள் செய்வானாக ஆமீன்!

